முன் பக்கத் தொடர்ச்சி: பலவந்தமாகப் பெறத் தெரிந்தவர்களுக்கே அழகைக் காப்பாற்றி வைத்துக்கொள்ளத் தானே தெரியாது? * . தப்பு செய்வதைத் தடுக்க முயல்வதே மனித சுபாவம் * தவறை உணர்ந்து பச்சாத்தாபம் அடையும் தன்மை யாரிடம் இருக்கிறதோ அவரே மனிதன் * பற்று அழிவதில்லை; அழிய விரும்புவதும் இல்லை. பற்று என்பது என்ன என்பதும் நன்றாக விளங்குவதில்லை. இளைய உள்ளம் திருப்தியற்ற ஒரு விருப்பத்தினால் எப்பொழுதும் அலைந்து கொண்டே இருக்கிறது. ஏன் இப்படி ஒன்றும் புரியாமல் லட்சியமற்ற திசையில் செல்கிறோம் என்பதை நிர்ணயம் செய்யவே முடியவில்லை * தன் இதயத்தைக் கல்லாக்கிக் கொண்டு வெட்கம், மானம், நன்மை, தீமை என்ற ஞானமே இல்லாமல், ஜடமாகிவிட்டான். * யௌவனத்தின் தென்பு ஏறும்போது உலகம் அழகாகவும் இனிமையாகவும் தோன்றுகிறது. அதன் இனிமை முழுவதையும் நம் கண்களாலேயே பருக முடிவதில்லை. துணையிருந்தால் - இன்னும் இரண்டு கண்கள் இதைப் போலவே நன்றாக இந்தச் சோலையின் இனிமையை அநுபவிக்க முடியுமானால்? * . பயங்கரமான கனவையும் சகித்துக் கொள்ளலாம்; ஏனென்றால் சகிக்க முடியாதபோது தூக்கம் கலைந்து விடும். ஆனால் விழித்துக் கொண்டே கனவு காண்பதில் தீராத் தொல்லையாகிப் போய்விடுகிறது. * . நண்பர்களோடு வாதித்துக் கொண்டிருக்கும்போது திடீரென்று தன்னை வந்து விட்டால் இவ்வளவும் மனம் சோர்ந்து சிறிது நேரம் மௌனமாக உட்கார்ந்து விடுவது வழக்கம். இந்த நிலையை ஒத்திருந்தது அவன் நிலைமை * ஒரு நிமிஷம் அவன் மேல் தீப்பற்றியதைப் போன்ற ஒரு உணர்ச்சி உண்டாகியது. * என் அழகைத் திருடிக்கொள்ள ஏதாகிலும் வழியிருந்தால் நீ என்னைத் தொட்டு ஒரு பக்கத்தில் அமர்ந்து விடுவாய் என்றான் * பெண்களைப் போல் துர்பலமானவன். பெண்களைப் போல் மென்மையானவன். பெண்களைப் போல் அழகு வாய்ந்தவன். * . அவள் யுவதி, அழகி, விவாகமாகாதவள், தனி நிறையச் செல்வம் படைத்தவள். மனிதர்களின் யௌவன ராஜ்யத்தில் அவளுக்கு உயர்ந்த ஸ்தானம் உண்டு. * தனியாகப் பிரயாணிக்கலாம். ஆனால் தனியாக அனுபவிக்க முடியுமா? * . அவன் தோல்வியின் வெட்கம் தலையோடு தரையைத் தொட்டன. * . நடந்த நிகழ்ச்சிகள் யாவும் ஏதோ கழிந்த யுகத்தில் நடந்தவை போலும், ருசியற்றனவாகவுமே அவனுக்குத் தோன்றின. *. அகாரணமாய் ஒரு மனிதன் அவமானம் அடைந்தால் அவன் உள்ளத்தில் எப்படிப்பட்ட அதிர்ச்சி ஏற்படும் என்பது அவனுக்கு வந்த கொடுமையான ஜுரத்திலிருந்து தெரிந்தது. *. ஒருவனை பொறாமையின் மூலம் எப்படிப்பட்ட கொடுமையை இழைக்கலாம் என்பதை அவன் உணர்வில் கண்டான். * .

**மோகினி:** கற்பாறையை செதுக்கும் வேலைதான் கலை. பாறையை எந்த இடத்தில் எப்படிச் செதுக்கினால் சிலையாகும் என்று அறிவிக்கும் நுண்கலையைப் போன்றதுதான் இது கதை எழுதும் கலையும் * மனித வாழ்க்கையில் ஒரு குறிப்பிட்ட கணத்தில் குறிப்பிட்ட சூழ்நிலையால் ஏற்பட்ட ஒருவனுடைய மனநிலையையோ அல்லது மனிதனுடைய ஆசாபாசங்களையும் விருப்பு வெறுப்புக்களையும் போராட வைக்கும் சம்பவங்களை அடிப்படையாகக் கொண்ட கதையையோ சித்தரிப்பதுதான் இக்கலையின் வேலை * இளமையும் இயற்கையும் ஒன்று சேர்ந்து அவளை அழகுத் திரளாய் அமைத்திருந்தன * எப்பொழுதும் அவளிடம் குடியிருந்த வெடுவெடுப்பும், மனிதர்களைத் தூக்கி எறிந்து பேசும் சுபாவமும் யாரும் விரும்பத்தக்கதாயில்லை. * வாழ்க்கையின் சுவையை இன்னதென்று அறியாத அப்பெண்ணுக்கு இப்பொழுது மனத்தில் உண்டான புதிய உணர்ச்சிகள் ஏககாலத்தில் இன்பத்தையும் துன்பத்தையும் உண்டாக்கின * விகடன் எவ்வளவு பதவிசாக நடந்துக் கொள்கிறான் * புத்தபகவானைப் போல உலகத்தின் தன்மையையே அறியாது, அதிலுள்ள பொய் பித்தலாட்டங்கள், காமக் குரோதங்கள் ஒன்றும் தெரியாமல் வளர்ந்திருக்கிறான் * எப்பொழுதும் சுத்தமான வெள்ளை உடுப்புகளைக் கேட்கும் குழந்தைகள் * காதல் ஏற்படும் பொழுது இடம் பொருள் ஏவல் என்கிறதை எதிர்பார்த்து வராது தெரியுமா? * யௌவனத்தினால் எழும் மனமாறுதல் தவிர வேறில்லை காதல் என்பது *

**தேவி சௌந்தரராணி:** எந்த சமயத்திலும் மனிதர்களால் ஒரே துக்கத்தை சகித்துக் கொள்ள முடிகிறதில்லை. துக்கமும் சுகமும் மாறிமாறி வாழ்க்கையில் கலந்து வந்தால்தான் மனிதரால் வாழ்வின் சுமையைத் தாங்க முடியும் * கால் போனபடி மனம்; மனம் போனபடி கால் என்ற வழியில் சென்றான் * அந்தரங்கத்தில் அடமோதிக் கொண்டிருக்கும் மாறுபட்ட உணர்ச்சிகளை வெளியுலகம் அறியாத வண்ணம் அவளுக்கு சக்தியற்றுப் போய்விட்டது * ஆரவத்தெழுந்து மறையும் நாடக பாத்திரங்கள் போல் எண்ணங்கள் மறைந்தன * பாதர் வெள்ளைச் சுமையைவிட்டு இப்பொழுது ஏதோ ஞான உபதேசம் செய்வதாக எண்ண வேண்டாம் * நீ மட்டும்தான் மானத்தை குத்தகை எடுத்திருக்கிறாயா என்ன? *